# சுருதி பேதம்

'உன்னிடம் எப்படிக் கத்த முடியும்? ஹோட்டல்காரனிடம் கத்தினாலும் சற்று பயந்துகொண்டு செய்வான். 'காபி கொண்டு வா' என்று கேட்டால், கொஞ்சமாகப் பொடியைப் போட்டு, நிறைய உப்புத் தண்ணீரை விட்டு, பொடிமிதக்க அழுக்கத் துணியில் வடிகட்டி, ஆறின பிறகே ஆடையோடு கூடிய பாலை ஊற்றிச் சர்க்கரை போதாமல் கலந்து, பாசி படிந்த பித்தளைத் தம்ளரில், ஒரு விரல் உள்ளே தோய்ந்தபடிக் கொண்டு கொடுப்பாய்- அதை நான் தேவாம்ருதமாக எண்ணிக் குடிக்கவேண்டும்' என்று ராமலிங்கம் கூறிக்கொண்டிருந்தார். உள்ளே வைத்த காலைப் பின்னுக்கு இழுத்துக்கொண்டு, விஜயா யோசனையுடன் நின்றுவிட்டாள். அவளது அழ

கிய முகம் மாசுமறுவற்று, இயற்கைப் பொலிவுடனும், செயற்கை எழிலுடனும் இருக்க, அதைக் கலைக்கவென்று ஏற்பட்டதுபோன்று மூன்று கோடுகள் நெற்றியை உழுதன.

'இங்கேயும் இவ்வளவுதானா? நாம் என்னவோ ஆறுதலை உத்தேசித்து இங்கு வந்தோமே!' என்று எண்ணியபடி, அவள் வாயிற் படியில் தயங்கி நின்று விட்டாள்.

அகஸ்மாத்தாகத் தெருப்பக்கம் பார்த்த ராமலிங்கம், விஜயா நிற்பதைக் கண்டு, 'உள்ளே வாருங்கள், சரோஜா இருக்கிறாள்' என்று கூறிவிட்டுத் தன் அறைக்குச் சென்றுவிட்டார்.

விஜயா விடுவிடென்று உள்ளே சென்றாள். தன் சிநேகிதி சரோஜா கட்டிலின் மீது படுத்துக்கொண்டு அழுது கொண்டிருப்பாள் என்று அவளுக்குத் தீர்மான மாகத் தோன்றியது.

அந்தச் சம்பவத்தை எப்படிச் சமாளிக்கலாம் என்று தன் மனத்தினுள் யோசித்தபடியே, அவள் உள்ளே நுழைந்தாள்.

'விஜயா, இங்கே இருக்கிறேன் வா' என்று சமையலறையிலிருந்து குரல் கொடுத்தாள் சரோஜா. அவள் த்வனி கணீரென்று இருந்தது. கண்ணீரினால் அலம்பப்பட்ட உப்புக் கரிப்போ, ககரகரப்போ அதில் சிறிதுமில்லை. விஜயா வியப்புடன் நோக்கிக்கொண்டே, தோழியிடம் ஏகினாள்.

'என்ன விஜயா, ஏன் முகம் ஒரு மாதிரி வாடியிருக் கிறது?' என்று விசாரித்தாள் சரோஜா.

விஜயா பதில் சொல்லாமல் சிநேகிதியையே நோக்கினாள். சரோஜா ஒருவிதமான மங்கல் மஞ்சள் நிற ஜார்ஜெட் சேலை உடுத்தியிருந்தாள். பச்சையில் ஜரிகை மஞ்சளில்கொடி போன்ற பூப்போட்ட ஸாடின் ரவிக்கை அவள் உடலைப் பூசியது. தலையை வாரி சக்கரம் போல் சுருட்டி முடிந்து, வெள்ளைப் பாசி மணிகள் கொண்ட ஒரு கறுப்பு வலையால் மூடி அலங்கரித்துக் கொண்டிருந்தாள். ஒரு மெல்லியதான தங்கச் சங்கிலியினின்று, சிறு குழந்தையின் உள்ளங்கை அளவிற்குக் கல் இழைத்த பதக்கம் ஒன்று தொங்கியது.

'என்ன விஜ்ஜு, என்னையே வைத்த கண் வாங்காமல் பார்க்கிறாயே?' என்று கேட்டுவிட்டுக் கலகல வென்று சிரித்தாள் சரோஜா.

விஜயாவும் சங்கோஜத்தை மறைக்கச் சிரித்தாள். 'உன்னைப் பார்த்ததும் ஒரு கவிதை எழுதலாம் போலத் தோன்றியது. அதுதான் உன்னையே கவனித்துப் பார்த்தேன்' என்று அவள் பதிலளித்தாள்.

சரோஜா மறுபடியும் கலகலவென்று ஒருமுறை சிரித்தாள். மின்சார அடுப்பின் பித்தானை நிறுத்திவிட்டு, தயாரான காப்பியைக் கலந்து ஆற்றியபடியே, அவள் அவ்வறையை விட்டுக் கிளம்பினாள். 'இரு விஜயா, ஒரே நிமிஷம். அவருக்குக் காப்பியைக் கொடுத்துவிட்டு வருகிறேன். நாமும் சூடாக ஒரு முழுங்கு குடித்துவிட்டுப் போவோம்' என்று கூறிவிட்டு மறைந்தாள்.

கச்சேரிக்குப் போகும் வழியில் சரோஜா பலமுறை விஜயாவிடம் தமாஷாகப் பேச்சுக் கொடுத்தும், விஜயா அநேகமாக உற்சாகமற்றுத்தான் தென்பட்டாள்.

'ஏன் விஜயா, முகம் வாட்டமாக இருக்கிறது?' என்று கேட்டாள் சரோஜா.

'வாட்டமில்லாமல் மலருவதற்கு என்ன கிடக்கிறது? நாமும் வெட்கமில்லாமல் புடவையும், ரவிக்கையும் அணிந்து கொண்டு வெளியே கிளம்புகிறோம். நீ என்னை விட எவ்வளவோ பாக்கியசாலி என்று நினைத்திருந்தேன். நீயும் தான்...'

'எனக்கென்ன குறைவு இப்போ? அது கிடக்கட்டும். உன் மனசில் இருப்பதைச் சொல். என்னால் முடிந்தால் ஏதாவது உதவி செய்கிறேன்' என்றாள் சரோஜா.

'நீ ஆயிரம்தான் மறைத்தாய் எனக்குத் தெரியாது என்று நினைக்காதே. உன் கணவர் உன்னைக் காபிக்காகச் சொன்ன வார்த்தைகள் நன்றாக என் செவியில் விழுந்தன. எனக்கு உள்ளே வரக்கூடத் தோன்றவில்லை. ஆனால், அவர் பார்த்துவிடவே வந்துவிட்டேன்.'

'அவர் அப்படித்தான் பேசுவார்.'

'அதை நீ எப்படித்தான் பொறுத்துக் கொள்கிறாயோ? இந்த விதமாகப் பேசும் ஆண்பிள்ளை வர்க்கத்தையே பூண்டோடு அழித்துவிட வேண்டும் என்று எனக்கு ஆத்திரம் வருகிறது. ஒரு பெண் காலையிலிருந்து இரவு வரை அவர்கள் சந்தோஷத்தையே கருதி உழைப்பதென்ன- ஒரே நொடியில் அவர்கள் அவளைத் தூக்கி அறிந்து பேசுவதென்ன?'

'என்ன நடந்தது?'

'ஒன்றா நடக்கிறது, சொல்வதற்கு? கண்ணை விழித்தால் தூக்கத்தில் மூடுவதற்குள் எண்ணாயிரம் தடவை ஏதோ நடக்கத்தான் செய்கிறது. நான் கச்சேரிக்குக் கிளம்ப வேண்டும் என்று சீக்கிரம் சீக்கிரமாக வேலை செய்து கொண்டிருந்தேன். அவர் வந்து தோசை போட்டுக் கொடுக்கும்படிக் கேட்டார். 'ஒரு

நிமிஷம் நின்றால் செய்வேன்' என்றேன். உடனே அவர் கிளம்பி விட்டார். பசியே இல்லையாம். நான் செய்து வைத்திருந்த தோசை வீணாகிவிடுமோ, அதனால் என் மனம் கலங்கி விடுமோ என்று அவர் என்னைக் கேட்டாராம். 'சிரமம் வேண்டாம்' என் சொல்லிவிட்டுக் கிளம்பினார். அவர் வயிற்றில் ஆளைத் தின்னும் பசி இருக்கிறது என்று எனக்குத் தெரியும்! எதற்கு இந்த வேஷமெல்லாம்?' என்று விஜயா கேட்கும்போது, ஆத்திரம் பொங்கிற்று அவள் குரலில்.

'அவருக்கு உண்மையிலேயே பசி இல்லையோ என்னவா?' என்று பொதுவாகக் கூறிவைத்தாள் சரோஜா.

'அதெல்லாம் ஒன்றுமில்லை. பத்து வருஷங்களாகப் பழகி, எனக்கு இதுகூடத் தெரியாதா? அத்தனையும் பொய் சரோஜா, பொய். கேட்பானேன்- பிறகு...?'

'நீதான் உடனே செய்வதாகச் சொல்வதுதானே?'

'உடனே செய்யத்தான் ஆரம்பித்தேனே?-அதற்குள் அவருக்கு வந்து விட்டது கோமாளித்தனம்.'

'அதற்கேற்ற கோமாளிப் பதில் கொடுப்பதுதானே நீ? 'நீங்கள் சாப்பிடாமல் போய்விட்டால்தான் எனக்குத் தாங்காது' என்று சொல்லிவிடுவது தானே?'

'அப்படியெல்லாம் அசந்தர்ப்ப ஹாஸ்யம் புரிய எனக்குத் தெரியவும் தெரியாது. பிடிக்கவும் பிடிக்காது.'

சரோஜா பதிலுக்கு ஏதோ வாயெடுத்தாள். ஆனால் போசாமலிருந்து விட்டாள்.

'... இன்றைக்கு உங்கள் வீட்டில் என்ன ரகளை?' என்று கேட்டாள் விஜயா.

'எங்கள் வீட்டிலா?' என்று கேட்டு ஒரு கணம் விழித்தாள் சரோஜா. பிறகு ஒருவாறு புரிந்துகொண்டு, பதில் சொல்லலானாள். 'எங்கள் வீட்டிலா? அவர் நான் கிளம்புமுன் நல்ல காபி கேட்டார். நாழிகையாகி விட்ட படியால், ஹோட்டலில் சாப்பிடுகிறேன் என்றார். நான் வீட்டிலேயே தயாரிக்கிறேன் என்றேன். அதற்குத்தான் ஒரு பிரசங்கம் செய்தார்' என்றாள் சரோஜா.

'என்னவோ, உனக்குத்தான் வேண்டியிருக்கிறது இந்த வேடிக்கையெல்லாம்? ஆனால், உன் புருஷர் வேறு விதம், என்னுடையவர் வேறு விதம். உனக்கு எவ்வளவு அழகான நகையும், புடவையும் வாங்கிக் கொடுக்கிறார். இவர் வாங்கியதாகக் காட்டுவதற்கு என்னிடம் ஒரு ரிப்பன் கூடக் கிடையாது...'

விஜயாவின் துக்கம் படிந்த முகத்தைப் பார்த்ததும், சரோஜாவுக்கும் துக்கமாக இருந்தது. 'ஏன்,அவருக்கு வாங்கத் தெரியாதா? இத்தனைக்கும் நீ நிறைய வாங்கிக் கட்டிக்கொள்கிறாயே?'

'இவர் வாங்கவில்லை என்பதற்காக நான் கந்தலை உடுத்திக்கொண்டு திரிய மாட்டேன்-நான் போய்ப் பார்த்து வாங்கிக்கொள்கிறேன். இல்லாவிட்டால் என் அம்மாவோ, தங்கையோ யாரேனும் பார்த்து வாங்கு வார்கள்.'

'நீ வாங்கும்போது அவர் உன்னோடு வருவாரே? அப்போது இருவரும் பார்த்துப் பார்த்துத்தானே பொறுக்கி எடுப்பீர்கள்?' என்று கேட்டாள் சரோஜா.

'அதுதானே கிடையாது. கடைக்கு வந்தாலும்கூட, அவர் வாயை இறுக மூடிக்கொண்டு நிற்பார்' என்று விஜயா பதிலளித்தாள்.

சரோஜா வாயடைத்து நின்றாள். அவள் முகத்தில் வேதனையும், பரிதாபமும் படர்ந்தன.

கச்சேரி ஆரம்பிக்க நேரமாகிவிடவும் இருவரும் மேலே பேசாமல் வேகமாக நடந்து கொட்டகைக்குள் சென்றனர். அவர்கள் தத்தம் இடங்களில் அமர்வதற்கும், கச்சேரி ஆரம்பமாவதற்கும் சரியாக இருந்தது.

பாடகர் முன்னணிக்கு வந்துகொண்டிருக்கும் இளம் வித்துவான். அவருக்கு நல்ல சாரீரமும், உயர்ந்த ஞானமும் இருந்தன. பாணியும் அழகாகவே இருந்தது. அவர் விறுவிறுப்புடன் பாடினார். பக்க வாத்தியங்களும் நன்றாக இருந்தன. ஆயினும் கச்சேரி சோபிக்காமல் சப்பென்றிருந்தது. சரோஜா எல்லோர் முகத்தையும் பார்த்தாள். கேட்பவர் வதனங்களில் ஜீவகளை அற்றிருந்தது. கொடுத்த பணத்திற்குத் தண்ணீர் பாலாவது வாங்கிக் கொள்ளும் மனப்பான்மையே பிரதிபலித்தது.

'என்ன, பாட்டு சோபிக்கவே இல்லையே?' என்று மெதுவாகக் கேட்டாள் சரோஜா.

'சுருதி சேரவில்லை. அதுதான்' என்று சட்டென்று பதிலளித்தாள் விஜயா. அவளுக்கு நல்ல சங்கீத ஞான முண்டு.

'நாம் போய்விடுவோமா, ரகிக்க வில்லையே?'

'வீட்டுக்குப் போய் என்ன செய்வது? இங்கே தான் நேரத்தைக் கழிப்போம்.'

சரோஜாவின் மனம் பாட்டுக் கச்சேரியை விட்டுத் தோழியின் வாழ்க்கை விசாரணையில் லயிக்கத் தொடங் கியது.

'சட்டென்று பதிலளித்து விட்டாளே? தன் வாழ்க்கையை ஏன் பாழ்படுத்திக் கொள்ளுகிறாள்? நல்ல குணசீலரான கணவர், புத்திசாலியான பிள்ளைக் குழந்தை, வேண்டிய அளவு சௌகரியங்கள் எல்லாம் இருந்தும்,

ஏன் இவள் வாழ்வு சோக மயமாகவே முடிந்து விட்டது?' என்று திரும்பத் திரும்பச் சுழன்றது சரோஜா வின் மனம்.

விஜயாவின் கணவர் ஷண்முக சுந்தரம் அழகான ஆண்மையாளர். கை நிறையச் சம்பாதித்தார். அவருக்கு நிறைய சிநேகிதர்கள் இருந்தனர். அத்தோடு மட்டு மல்லாமல், அவர்தான் அந்தக் குழாத்துக்கே உயிராக இருந்தார்.

'ஷண்முகம் இதைச் சொல்ல வேண்டும், ஷண் முகம் இதைக் கேட்க வேண்டும், இதைப் பாாத்தால் ஷண்முகம் தான் ரசிப்பான், அவன் பிறவி ரசிகன், கலைஞன்' என்று பலவாறும் அவருடைய நண்பர்கள் புகழக் கேட்டிருக்கிறாள் சரோஜா. அத்தகைய ஒருவர், தன் விட்டில், தன் சொந்த மனைவியிடம் ஏன் வேறு விதமாக இருக்க வேண்டும் என்று புரியவில்லை சரோஜாவுக்கு.

கச்சேரி முடிந்ததும் இருவரும் கிளம்பினார்கள். சரோஜா தன் சிந்தனையிலேயே சிக்குண்டு கிடந்தாள் போலும். பேசவேயில்லை.

'விஜ்ஜு, நான் சொல்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே' என்ற பீடிகையுடன் ஆரம்பித்தாள் சரோஜா.

'நீ இன்னமும் கொஞ்சம் பாடுபட்டு ஹாஸ்யத்தை ரசிக்க ஆரம்பித்தால், உன் வாழ்வே மாறிவிடும் என்று எனக்குத் தோன்றுகிறது. இன்று பார், நீ வரும்போது என் வீட்டில் அவர் ஏதோ சொன்னதை நீ விபரீதமாக எடுத்துக் கொண்டு விட்டாய். அப்படியெல்லாம் பூசனியில் ஒட்டிய முத்தாக நாம் உதிர்ந்தால், எப்படி வாழ முடியும், சொல். அவர்பாட்டில் சொல்லிக் கொண்டே போனார். நான் அதற்குப் பதில், 'இப்படிப் பேசி என்ன பயன்? என் கை காப்பிதான் உங்களுக்கு ருசிக்கப் போகிறது' என்று கூறி விட்டுக் கொடுத்தேன். சிரித்துக்கொண்டே

குடித்து விட்டார். அவ்வளவுதான். எங்கள் மண வாழ்வின் ஆகாயம் சங்கீதம் பாடிக்கொண்டு நிர்மலமாக விரிகிறது' என்றாள் சரோஜா.

'பாடம் சொல்வதற்கென்ன சரோஜா, எல்லோரும் சொல்லலாம். எங்கள் வீட்டில் ஒரு நாள் முழுதும் வந்து இரு, தெரியும். நானாக இருக்கவேதான் அந்தப் புரளி மயமான மனிதனுடன் வாழ்க்கை நடத்துகிறேன். அவருக் கேற்ற பிள்ளை வேறு பிறந்திருக்கிறது. இன்று அவர்கள் செய்வதை உன்னிடம் சொல்லி ஆற வேண்டும் என்று தான் நான் வந்தேன். அதற்குள் உன் புருஷர் பேச்சு கேட்டது. எப்படி எப்படியோ போயிற்று. நல்ல காலம், சொல்லாமல் மிகுந்தேன்' என்று கடுமையாகப் பேசினாள் விஜயா.

'விஜயா, சொல். என்ன சொல்லவேண்டுமென்று நினைத்தாயோ சொல். அப்பொழுதுதான் மனப் பாரம் குறையும்' என்று கேட்டுக்கொண்டாள் சரோஜா.

'ஒன்றும் வேண்டாம். பிறகு, நீ குற்றம் என்மீது என்று எடுத்துக் காட்டி இறுமாந்திருக்க நான் ஏன் இடம் கொடுக்க வேண்டும்? அவ்வளவு முட்டாள் அல்ல நான். சரோ, இத்தனை நாட்களாக நீ என் உண்மைத்தோழி என்று நான் நினைத்தேன். இன்றுதான் உன் விஷயம் புரிந்தது. இத்தனை நாட்களும் என்னோடு அந்தரங்க மாகப் பழகுவதுபோல் பாசாங்கு செய்துவிட்டு, நீ அவர் பக்கமே யோசித்திருக்கிறாய். உன்னை நம்பினேனே, அதைச் சொல்' என்று காரசாரமாகப் பேசினாள் விஜயா.

'இல்லை விஜயா. இப்பொழுதும் நான் உன் தோழிதான். நீ அப்படியெல்லாம் தவறாக நினைக்காதே. நான் உன் நலனுக்குத்தான் சொன்னேன். உன் இல்லற வாழ்வின் நுட்பங்கள் உனக்குத் தெரிந்ததுபோல் எனக் கெப்படித் தெரியும்? நீ இப்படிக் கோபித்துக் கொள்ளக்

கூடாது, வா' என்று கூறிக்கொண்டே சரோஜா, வேக மாகத் திரும்பிப் பாராமல் நடந்து செல்லும் தன் தோழியைப் பின்பற்றினாள்.

ஆனால், விஜயா ஒரே பிடிவாதமாகப் போய் விட்டாள். சரோஜாவின் மனத்தில் சிறிது சினமும் உதிக்க ஆரம்பித்தது.

'அவளுக்கு நல்லதுதானே சொல்லப்போனேன்? அதற்கு என்னிடம் பகைமை பாராட்டுகிறாளே? எப்படியாவது கீரியும், பாம்புமாக, எலியும் பூனையுமாகச் சண்டை போட்டுக் கொள்ளட்டுமே!' என்று அவள் முணு முணுத்துக்கொண்டே தன் வீடு சென்றாள்.

'ஏன் சரோ? பாட்டுக் கச்சேரி நன்றாக இல்லையா? ஏன் என் சரோஜம் வாடி விட்டது?' என்று கிண்டலாகக்க கேட்ட தன் கணவருக்குக்கூடப் பதில் சரியாக அளிக்காத அவள், விடுவிடென்று உள்ளே போய்விட்டாள்.

ராமலிங்கம் பின் தொடர்ந்தார். 'என்ன விசேஷம்? உன் தோழி எங்கே?' என்று கேட்டார்.

'அவள் வீட்டுக்குப் போய்விட்டாள்' என்று சலிப்புடன் பதில் அளித்தாள் சரோஜா.

'ஏன்?'

'அது ஏனோ, யார் கண்டார்கள்?' என்று ஆரம்பித்த சரோஜா, அதற்குமேல் தாங்க மாட்டாமல் அன்று நடந்ததை அப்படியே கூறினாள்.

'ஓகோ! அதுவா விஷயம்? ஷண்முகம் தன் பிள்ளை விஜயகுமாரனை அழைத்துக்கொண்டு வந்திருந்தான். தனக்கு இன்று சைக்கிள் கற்றுக்கொடுக்க வேண்டும் என்று கேட்டானாம் மகன். ஷண்முகம் 'சரி' என்று சொல்லாமல் 'அம்மாவிடம் கேட்டு வா' என்றானாம்.

அவள் கேட்டதற்குச் சரியாகப் பதில் சொல்லாமல், 'உன் இஷ்டம், உன் அப்பா இஷ்டம்'என்றாளாம். அதற்கு அந்தப் பையன் திரும்பிப் பேசினானாம்...'

'என்ன சொல்லி விட்டானாம்?'

'நீங்கள் இரண்டு பேரும் சண்டை இல்லாமல் இருக்கப் போவதில்லை. எனக்கும் ஒன்றும் நடக்கப் போவதில்லை என்றானாம்' என்று கூறிவிட்டு, ராமலிங்கம் 'ஹோ!'என்று சிரித்தார்.

'சிரிக்கிறீர்களே!'

'பின்னே என்ன செய்வார்களாம்! ஷண்முக சுந்தரம் கூடச் சொல்லிச் சொல்லிச் சிரிக்கத்தான் செய்தான்' என்று மொழிந்துவிட்டு, மீண்டும் சிரித்தார் ராமலிங்கம்.

'அவருக்கு வாழ்க்கையே வேடிக்கையாய் இருக்கிறது. அவளுக்கு வேடிக்கையும் விபரீதமாக இருக்கிறது' என்றாள் சரோஜா.

'அவனும் நல்ல பையன். அவளும் மிகவும் நல்ல பெண் என்கிறாய் நீ. பின் ஏன் அவர்கள் சந்தோஷமாக இல்லை?'என்று உண்மைக் கவலையுடன் கேட்டார் ராமலிங்கம்.

'சுருதி பேதம். இன்று பாடகன் சுருதியோடு சேராமல் பாடிக்கொண்டே போனான். கேட்கவே வழங்கவில்லை. எனக்கு முன் அவளேதான் அதைக் கண்டு பிடித்தாள். தம்பூர் நல்லதாக இருந்தால் என்ன, பாடகன் பல நாள் பயின்றவனாக இருந்தால் என்ன? தம்பூர் சுருதி நாதமும், இவன் குரல் நாதமும் சேர்ந்து இழைந்தால் அல்லவா ஜீவனுள்ள சங்கீதம் ஏற்படும்? தன் வாழ்க்கையிலும் சுருதி பேதம் இருப்பதை அறிந்து கொள்ளாத மூடமாக, அவள் தன் கணவனையும், பெற்ற பிள்ளையையும் கடிந்து

கொள்கிறாள்' என்றாள் சரோஜா. அன்று அவள் தோழி அவளிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டது, அவளை மிகவும் பாதித்துவிட்டது போலும்.

'சரோ, அவளுக்கு நீ இதமாக எடுத்துச் சொல்லேன், பாவம்?'

"அவள் அதற்கு மசிய மாட்டாள். நீங்கள் தான் உங்கள் ஷண்முக சுந்தரத்திடம் கூறுங்களேன்' என்றாள் சரோஜா.

'அவனும் பிடிக்கு அகப்படுவான் என்று எனக்குத் தோன்றவில்லை. சிரித்துப் பேசி மழுப்பி, எதையும் தட்டிக் கழிக்கும் அளவுக்கு அவன் மனம் வயிரம் பாய்ந்து விட்டது. எந்தக் கொடுமையைக் கண்டு நம் கண்களில் நீர் வருகிறதோ, அதையே அவன் வெகு தமாஷாகக் கேலி செய்து நான் கேட்டிருக்கிறேன்' என்று ராமலிங்கம் சொல்லி முடிக்கும்போது, நண்பனின் குடும்ப நிலைக் காக அவர் கண்களில் ஒரு சொட்டு நீர் தோன்றியது.

'சரியாய்ப் போயிற்று. விட்டுத் தள்ளுங்கள். அவர்கள் செவிகளுக்கே அந்தப் பேதம் எட்டினால்தான் உண்டு' என்றாள் சரோஜா.

'மிகவும் பயங்கரமாக இருக்கிறது' என்றார் ராம லிங்கம்.

'ஆமாம்' என்று கூறிவிட்டு, சரோஜா எழுந்து சென்று விட்டாள்.

அவள் வெகு நேரம் கழித்து முன் பக்கம் வந்தாள். 'சாப்பிட வருகிறீர்களா?' என்று அழைத்தாள்.

'உம், என்ன சமையல்?'

'வெறும் இட்டிலியும், வெங்காய சாம்பாரும் தான்' என்றாள் சரோஜா, கணவனின் கலத்தை வைத்துக் கொண்டே.

ராமலிங்கம் மவுனமாக வந்து உட்கார்ந்து, இட்டிலியை உண்ண ஆரம்பித்தார். சரோஜா அவரையே பார்த்துக்கொண்டு நின்றாள். அவர் ஓர் இட்டிலியைப் பிய்த்தார். சாம்பாரில் தோய்த்தார். வாயில் போட்டுக் கொண்டார். மீண்டும் சாம்பார் வேண்டுமென்பதற்குக் கூடப் பேசவில்லை. விரலால் சமிக்ஞை காட்டினார்.

சரோஜா தயக்கத்துடனே சாம்பாரை விட்டுவிட்டு, கவலையுடன் தன் கணவனின் முகத்தை ஆராய்ந்தாள். 'எப்படி இருக்கிறது? ஒன்றுமே சொல்லாமல் சாப்பிடு கிறீர்களே?' என்று கேட்டு விட்டாள் அவள்.

'ஒன்றுமில்லை. அந்த ஷண்முகத்தின் குடும்பத்தைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டே இருந்தேன்.'

'பூஜை வேளையில் கரடி புகுந்தது போல, அந்த யோசனை எங்கே வந்து குறுக்கிட்டது? உண்கிறது ருசிக்கூடக் கெட்டுவிட, அவள் ஒருத்தி வந்து சேர்ந்தாள் எனக்கு' என்று அலுத்துக்கொண்டாள் சரோஜா.

'பார்த்தாயா? நீ இப்படிப் பேசலாமா? நாம் மட்டும் சந்தோஷமாக இருந்தால் போதுமா?'

'அதற்கு நாம் என்ன செய்வது? ஒரு வழிக்கும் அவர்கள் வரமாட்டார்கள். பரஸ்பரம் நம்பிக்கையும், மரியாதையும் இல்லாவிட்டால், குடும்பம் அப்படித்தான் இருக்கும். இன்றைக்கு அந்தப் பையன் கேட்டான் என்கிறீர்களே? இனிமேலாவது அவர்களுக்கு விழிப்பு வரட்டுமே?' என்றாள் சரோஜா.

'இதற்கெல்லாம விழிப்பு வந்து விடாது. ஏதாவது உள்ளத்தை உலுக்கும்படிச் சம்பவம் நேர்ந்தால், அவர்கள் மனம் திருந்தலாம்.'

'எனக்கு நம்பிக்கை இல்லை. முன்னே ஒரு தரம், உங்களுக்கு நினைவு இல்லையா? நாம் எல்லோரும் கிரிக்கெட் பார்க்கப் போனோமே? அவள் வரவில்லை. அவர் மட்டும் விஜய குமாரனை அழைத்து வந்தார். கிளம்பும்போதே அவளுக்கு இஷ்டமில்லை. அப்படியும் பையனின் ஆர்வத்தை உத்தேசித்து அழைத்து வந்தார்...'

'ஆமாம், ஆமாம். அதுகூடப் பையனை உத்தேசித்து என்றுகூடச் சொல்லமாட்டேன். நம்மோடு இன்னும் நான் கைந்து பேர்கள் இருந்தார்கள். அவர்கள் எதிரே அவள் சச்சரவு செய்தது அவனுக்குப் பிடிக்கவில்லை. பிடிவாதமாக அழைத்து வந்தான். கடைசியில் மழையில் நனைந்து, அந்தக் குழந்தைக்குக் காய்ச்சல் வந்தது அல்லவா?' என்றார் ராமலிங்கம்.

'அதைத்தான் சொல்ல வந்தேன். அதைவிட நெஞ்சை உருக்கும் கட்டம் எது? அந்தப் பையன் நிமோனியா ஜ்ரத்துடன் படுத்துவிட்டான். பிழைத்ததே புனர் ஜன்மம். ஆனால், அந்த நெருக்கடியிலும் இருவரும் ஒன்று சேராமல் எட்டப் பிரிந்துகொண்டே போனார்களே தவிர...'

'அவரோ புறப்படும்போது அவள் மனமில்லாமல் அபசகுனமாகப் பேசினதால்தான் குழந்தை படுத்து விட்டான். தாயின் சாபம் என்றெல்லாம் இசைந்து கொண்டிருந்தார். அந்தத் தடவை அவன் பிழைத்திரா விட்டால், விஜயா சாகும் வரை அவள்மீது கொலைக் குற்றம் சாற்றியிருப்பார் அவர்.'

'அவளோ தான் எவ்வளவு முன்ஜாக்கிரதையாகக் கூறியும் கேளாமல், அவர் அழைத்துப் போனதால்தான் விபரீதம் வந்தது. அவன் அன்று மழையில் நனைந்து படுக்க வேண்டும் என்றே அவர் பிடிவாதம் பிடித்தார். தன் மீது பழி வாங்கக் கருதினார் என்றெல்லாம் கூப்பாடு போட்டாள். நான் கடவுளை நினைத்து வேண்டின அளவு அவர்கள் பிரார்த்தனை செய்யவில்லை. எப்படியோ பிள்ளை பிழைத்தான்' என்றாள் சரோஜா.

ராமலிங்கம் அப்டியே யோசனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்தார்.

'நீங்கள் என்ன இப்படிக் கல்லாகச் சமைந்து போகிறீர்கள்?' என்று கேட்டாள் மனைவி.

'இல்லை. உன்னைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன்...'

'அட, அது என்ன?' என்று கேலியாகக் கேட்டாள் சரோஜா.

'நம் வாழ்க்கையில் வந்த கஷ்டத்தை விடவா? நீ எத்தனை தடவை சொல்லியும் கேட்காமல் விளையாடி, தோட்டத்துத் தண்ணீர் தொட்டியில் குழந்தை பானுவைப் பறிகொடுத்து விட்டேனே? அப்போதுகூட நீ ஒன்றுமே சொல்ல வில்லையே!'

சரோஜாவின் கண்களில் குபுகுபுவென்று நீர் சுரந்து விட்டது. கணவன் குறிப்பிட்ட அந்த நிகழ்ச்சி அவள் நினைவிற்கு வந்தது. அன்றுமாலை, குழந்தையை அலங்காரம் செய்து தோட்டத்தில் வைத்துக்கொண்டு, கொஞ்சிக் குலாவிக் கொண்டிருந்தாள் சரோஜா. ராமலிங்கம் காரியாலயத்திலிருந்து திரும்பி வந்தார். குழந்தை ஓடிப்போய் அவர் காலைக் கட்டிக்கொண்டது. 'அப்பா, ஏரோப்பிளேன்?' என்றது.

ராமலிங்கம் அவளை அப்படியே தூக்கி உயரப் பிடித்து, போட்டு போட்டு விளையாடினார். கைகளை வீசி வீசி ஊஞ்சல் ஆட்டுவதுபோல் ஆட்டினார்.

'பார்த்து! பார்த்து! பக்கத்தில் தொட்டியில் நிறைய மழைத் தண்ணீர் இருக்கிறது' என்று எச்சரித்தாள் சரோஜா.

ராமலிங்கம் சிரித்தார். இன்னும் வேகமாக ஆட்டினார். குழந்தை ஒரே குதூகலத்துடன் கூவி மகிழ்ந் தாள். சரோஜாவும் மலர்ந்து சிரித்துக் கொண்டிருந்த சமயம், விதி குறுக்கிட்டது. கையிலிருந்து அம்புபோலப் பாய்ந்து பானு தொட்டிக்குள் விழுந்து விட்டது. உடனே ஓடினார்கள். முதல் சிகிச்சை செய்தார்கள். கடைசி வரை சிகிச்சை செய்தார்கள். ஆயின், பானு அவர்களுக்குத் தக்க வில்லை.

சரோஜா பழைய நினைவுகளைத் துடைத்து விடுபவள் போல முகத்தைத் தலைப்பினால் அழுத்தித் துடைத்துக் கொண்டாள்.

'நான் கைத்தவறி இருந்தால், நீங்கள் மட்டும் என்ன செய்திருப்பீர்கள்? குழந்தை போனது பெரிய விபரீதமே தவிர, விளையாடினது விபரீதமில்லை. புத்திர சோகம் இருவருக்கும் உள்ளது தானே! பானுவுக்குத் தலை பின்னின கை பிசுக்கைக் கழுவக்கூடவில்லை. குழந்தையே மறைந்துவிட்டது. அப்படி இருக்கும்போது எதற்காக நாம் ஒருவரை ஒருவர் துன்பப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. விதியின் கைப்பொம்மை நாம். ஆட்டுவித்தபடி ஆடுவதை ஒன்றாகச் சேர்ந்துதான் ஆடிவைப்போமே' என்றாள் சரோஜா.

ராமலிங்கம் தன் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

'சரோ, ஒரு வார்த்தை நன்றாகச் சொன்னாய்! என் வாழ்க்கையில் சுருதி நன்றாகச் சேர்ந்திருக்கிறது, அதன் அருமை எனக்குத் தெரியவில்லை. ஷண்முகத்தின் வாழ்வில் சுருதி பேதம், அதன் கொடுமை அவர்களுக்குத் தெரியவில்லை. இதுவும் ஒரு வேடிக்கைதான்.'

'அப்படி ஒன்றுமில்லை. நாம் இரண்டு பேரும் மனம் தெளிந்து இருக்கிறோமே, அப்படித்தான் அவர்கள் இருக்கிறார்களா? இருவருக்கும் மனத்தில் சந்தோஷ மில்லை. கடமை பாரமாக இருக்கிறது. அந்தக் குழந் தைக்கும் மகிழ்ச்சியில்லை. அது ஒரு வாழ்வா?'

'நீ சொல்வதுபோல உலகத்தில் எத்தனையோ விஜயாக்களும், ஷண்முக சுந்தரங்களும் இப்படித் திண்டாடுகிறார்கள்? அவர்களை எப்படித் திருத்துவது?'

'திருத்துவது ஏது? நாம்நம் வேலையைப் பார்த்துக் கொண்டு இட்டிலி சாம்பார் சாப்பிட்டுக்கொண்டு நம்போக்கே போக வேண்டியதுதான். அது கிடக்கட்டும். இட்டிலி எப்படி இருக்கிறது என்று சொல்லவே இல்லையே?' என்று கேட்டாள் சரோஜா.

'ரொம்ப, ரொம்ப, சுருதி சுத்தம்!' என்று கூறிவிட்டு, ஒரு துண்டு இட்டிலியை வாட்டமாகச் சாம்பாரில் தோய்த்து எடுத்து, கச்சிதமாக வாயில் போட்டுக் கொண்டார் ராமலிங்கம்.

அவருடன் சேர்ந்து சரோஜாவும் கலகலவென்று நகைத்தாள். மனமும், மனதிடமும், சாதுர்யமும் அவரைப் பெருமிதத்தில் முக்கி முக்கி எடுத்தன.

'இத்தகைய நிறைவை நழுவ விடுகிறார்களே அசடர்கள்?' என்று அங்கலாய்த்தது அவர் மனம். சரோஜாவும் அவர் பார்வையினின்றே அதை ஊகித்துக் கொண்டாள். அவள் நகைத்தாள்.

மறுகணம் அவர்கள் இருவர் எண்ணமும் ஆராய்ச்சியை விட்டுவிட்டுத் தங்கள் குடும்ப ஆனந்தத்தில் மூழ்கியது.

(சுதேசமித்திரன்–6.4.1958)

------------